# மஸ்தூர் முரசு

MAZDOOR MURASU

மாத இதழ்

Vol. 12 Issue : 3 ஆசிரியர் : N.கண்ணையா ஜனவரி-2021 விலை ரூ.5/-




26-01-2021 அன்று பெரம்பூர் ரயில்வே ஸ்டேடியத்தில் நடைபெற்ற 72வது குடியரசு தினத்தன்று வண்ண பலூன்களை விண்ணில் பறக்கவிட்டு விழா நிகழ்ச்சிகளை துவக்கி வைத்த நமது பொதுச் செயலாளரும் AIRFன் தலைவருமான சகோ. டாக்டர் N.கண்ணையா அவர்கள், அருகில் நமது "GM" திரு.ஜான்தாமஸ் அவர்கள்

உள்ளே...

- தலையங்கம்
- யூனியன் செய்திகள்
- ரயில்வே போர்டு உத்த
- ரயில்வே செய்திகள்
- SRMU/AIRF செய்திக
- மருத்துவ குறிப்புகள்

Posted on : 08-02-2021

முகவரி :

REF.ID.NO.1520/MAS/HQ/00045081
SHRI./ SMT.SHANBAGAVALLI P
NO:F/5 SUBIKSHA FLATS
14 VYASAR ST EAST TAMBARAM
CHENNAI 600059


வெளியிடுவோர்:
சதர்ன் ரயில்வே மஸ்தூர் யூ
தலைமை அலுவலகம்,
193-B, ரயில்வே காலனி, காந்தி இர்வின்
எழும்பூர், சென்னை-600 008.



# தமிழகத்தில் பத்மஸ்ரீ விருதுகள் அறிவிக்கப்பட்டோர் பட்டியல்!


கர்நாடக இசைக்கலைஞர்
பாம்பே ஜெயஸ்ரீ


தமிழறிஞர்
சாலமன் பாப்பையா


வேளாண் துறையில்
புகழ்பெற்ற பாப்பம்மாள்


கோவையைச் சேர்ந்த மறைந்த
தொழிலதிபர் சுப்ரமணியன்


வில்லுப்பாட்டு கலைஞர்
சுப்பு ஆறுமுகம்


மறைந்த மருத்துவர்
திருவேங்கடம் வீரராகவன்


விளையாட்டு வீராங்கனை
பி.அனிதா
தெற்கு ரயில்வே


மறைந்த கே.சி.சிவசங்கர்,
கலைக்கான விருது


சமூக சேவகர்
சுப்புராமன்


தொழில்துறை
ஸ்ரீதர் வேம்பு


புதுச்சேரி கே.கேசவசாமி
கலைக்கான விருது







## தலையங்கம்



**பாசமிகு சகோதர, சகோதரிகளே!**

## அடக்குமுறையை எதிர்கொள்ள தயாராவோம்!

எந்தவித விவாதமும் இன்றி நாடாளுமன்ற கூட்டத்தில் அவசர கதியில் நிறைவேற்றப் பட்ட மூன்று விவசாய சீர்திருத்த சட்டங்களை நாடெங்கிலும் உள்ள விவசாயிகள் எதிர்த்துப் போராடினாலும், குறிப்பாக மாதக் கணக்கில் “டெல்லியில்” அமர்ந்து முற்றுகை இட்டாலும், மூன்று சட்டங்களை திரும்ப பெறவே முடியாது என அடம் பிடித்து வருகிறது மத்திய அரசு.

அதற்கு மாறாக! சிறு துளியும் வன்முறை இன்றி, அமைதியாக நடைபெற்று வந்த இந்த விவசாயிகளின் போராட்டம், திடீரென போராட்டத்தில் சம்பந்தமில்லாதவர்களின் ஊடுருவலுக்கு வழிவகுத்து, அதன் காரணமாக எதிர் பாராமல் வெடித்த வன்முறையை காரணமாக்கி அடக்குமுறையை கட்டவிழ்த்துவிட்டு, போராட் டத்தை கலைக்கும் முயற்சியில் இறங்கி விட்டது மத்திய அரசு.

மேற்கண்ட நிகழ்வுகள், நமது ரயில்வே சகோதர, சகோதரிகளுக்கு ஒரு நல்ல படிப்பினையே!

நமது எதிர்ப்பை துச்சமென மதித்து ரயில்வே தனியார்மய முயற்சிகளை தொடருகிறது மத்திய அரசு.





நமது போராட்டங்களையும் மீறி முடக்கப்பட்ட DA, குறைக்கப்பட்ட OTA, ரத்து செய்யப்பட்ட NDA என தாக்குதல்களை தொடர்கிறது மத்திய அரசு.

44 தொழிலாளர் நல சட்டங்களை "நான்கு கோடுகளாக" மாற்றி தொழிற்சங்க, தொழிலாளர் உரிமைகளை மறுத்து, "அங்கீகார சங்கங்கள்" என்ற சட்டபூர்வ அந்தஸ்தை வழங்காமல், தொழிற் சங்கங்களை பலவீனப்படுத்தி அப்புறப்படுத்த முயலுகிறது இந்த மத்திய அரசு.

ரயில்வே உள்ளிட்ட அனைத்து மத்திய, மாநில அரசு மற்றும் பொதுத்துறைகளில் "நிரந்தர வேலை வாய்ப்பு" என்ற முறையை மாற்றி, நம்மை, ஒப்பந்த, "தற்காலிக தொழிலாளர்களாக," Fixed Term தொழிலாளர்களாக மாற்றவும் முயற்சி செய்து வருகிறது இந்த மத்திய அரசு!

எனவேதான், பிப்ரவரி 1-ம் தேதி "மத்திய அரசு வரவு-செலவு கணக்கை தாக்கல் செய்யும் நேரத்தில் நாடு தழுவிய மத்திய அரசின் கவனத்தை ஈர்க்கும் போராட்டத்தை (Call Attention Day) AIRF அறிவித்துள்ளது.

தொழிலாளர் விரோத மத்திய அரசை எதிர்த்து ஒரு நீண்ட நெடிய போராட்டத்திற்கு, நாம் தயாராகி வருகிறோம் என்பதை பறைசாற்றவே நமது "கவன ஈர்ப்பு போராட்டம்" நடைபெறுகிறது என்பதை மறவாதீர்!

போராடும் நமக்கெதிராக அடக்குமுறைகளை அவிழ்த்து விட தயங்காத மத்திய அரசை எதிர்கொள்கிறோம் என்ற எண்ணம் நம்மிடம் இருக்க வேண்டும்.

எப்படி 1974 வேலை நிறுத்த போராட்டத்தை அன்றைய மத்திய அரசு அடக்கி ஒடுக்கினாலும் நாம் 'போனஸ்' கோரிக்கையில் வெற்றி பெற்றதுபோல, இம்முறையும் வெற்றி பெறுவோம்! வாரீர்!!

ஆசிரியர்

**N.கண்ணையா**







# யூனியன் செய்திகள்

## வைகை எக்ஸ்பிரஸ் ரயில் டிரைவருக்கு வீரதீர செயலுக்கான அண்ணா விருது

மதுரை-சென்னை இடையேயான வைகை எக்ஸ்பிரஸ் ரயிலை கடந்த ஆண்டு(18.11.2020 அன்று) திருமங்கலத்தைச் சேர்ந்த லோகோ பைலட்(விரைவு) சகோ. சுரேஷ் என்பவர் ஓட்டிச் சென்றார்.

அப்போது கொடைரோடு-அம்பாத்துரை இடையே நிலச்சரிவு ஏற்பட்டது. இதில் பாறைகள் உருண்டு தண்டவாளத்தில் விழுந்தன.

அப்போது ரயில் எஞ்சின் டிரைவர் சுரேஷ் சாமர்த்தியமாக செயல்பட்டு பிரேக் போட்டு 1500 பயணிகளின் உயிரை காப்பாற்றினார். இதனடிப்படையில் சுரேஷுக்கு வீரதீர செய்லுக்கான அண்ணா விருது வழங்கப்படும் என தமிழக அரசு அறிவித்தது.

சென்னை குடியரசுத் தின நிகழ்ச்சியில் வைகை எக்ஸ்பிரஸ் என்ஜின் டிரைவர் சுரேஷ்க்கு மேற்கண்ட விருதை தமிழக முதல்வர் எடப்பாடி பழனிச்சாமி வழங்கினார்!



சகோ. சுரேஷ் அவர்கள் சமயோசிதமாக செயல்பட்டு 1500 பயணிகளின் இன்னுயுரை பாதுகாத்து" மாநில அரசின் விருது" பெற்றதற்கு" **SRMU" பேரியக்கத்தின் சார்பாக நமது பொதுச் செயலாளர் Dr.N.கண்ணையா அவர்கள் தனது பாராட்டுதல்களை தெரிவித்தார்!**



# பாராட்டுகிறோம்!



தெற்கு ரயில்வே "சமூக தற்காப்பு" (Civil Defence) அமைப்பின் மூத்த ஆய்வாளர் திரு.S.பாஸ்கர் அவர்கள் பாரத குடியரசு தலைவரின்" ஊரக பாதுகாவர்கள் & சமூக தற்காப்புக்கான சிறப்பு விருதுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதாக நேற்று இரவு ஜனாதிபதி மாளிகையில் இருந்து வெளியான செய்திக்குறிப்பு தெரிவிக்கிறது.

தெற்கு ரயில்வேக்கு பெருமை சேர்த்த சகோ. R.பாஸ்கர் அவர்களை SRMU பாராட்டுகிறது!

## அகில இந்திய நுகர்வோர் விலைவாசி குறியீட்டு எண். (Base 2001-100)

**All India Consumer Price Index (Base 2001-12-100**

| Month Year | Base Year 2001-100 | 12 மாத மொத்தம் | 12 மாத சராசரி | கூடுதல் % D.A. 261.42க்கு மேல் |
|---|---|---|---|---|
| Aug. 2019 | 320 | 3709 | 309.08 | 18.23 |
| Sep. 2019 | 322 | 3730 | 310.83 | 18.90 |
| Oct. 2019 | 325 | 3753 | 312.75 | 19.63 |
| Nov. 2019 | 328 | 3779 | 312.75 | 20.46 |
| Dec. 2019 | 330 | 3908 | 317.33 | 21.39 -4% வழங்கப்பட வேண்டும் |
| Jan. 2020 | 330 | 3831 | 319.25 | 22.12 |
| Feb. 2020 | 328 | 3852 | 321.00 | 22.79 |
| Mar. 2020 | 326 | 3869 | 322.41 | 23.33 |
| Apr. 2020 | 329 | 3886 | 323.83 | 24.87 |
| May. 2020 | 330 | 3902 | 325.16 | 24.38 |
| June.2020 | 332 | 3918 | 326.05 | 24.72 |
| July. 2020 | 336 | 3935 | 327.91 | 25.43 -3% வழங்கப்பட வேண்டும் |







# RT Shopல் "ஓவர்டைமை" முடக்கும் முடிவை எதிர்த்து போராடி வெற்றி பெற்ற SRMU!





பெரம்பூர் கேரேஜ் பணிமனை யில் உள்ள "இன்சென்டிவ் இல்லாத பகுதியாக" உள்ள RT Shopல் பணிபுரியும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சம் 50% ஓவர் டைம் கிடைப்பதை பல்வேறு போராட்டங்கள் நடத்தி உறுதி செய்து வரும் இயக்கம் நமது SRMU.

கொரோனா பேரிடரை காரணம் காட்டி பொதுவாக TA, OTA போன்ற ரயில்வே போர்டு உத்தரவை கையில் கொண்டு RT Shop லும் 50% OTஐ உடனடியாக நிறுத்துவதாக 19-01-2021 அன்று "CWM/CW" ஒப்புதலோடு, DYCME / Production அறிவித்தார்.

இந்த அறிவிப்பு வெளியான சற்று நேரத்தில், **RT Shopல் வேலை செய்யும், சுமார் 95 தொழிலாளர் களும், அருகாமையில் உள்ள வேகன் பணிமனையில் பணியாற்றும் சுமார் 800 பேரும், தங்கள் பணியை நிறுத்தி, SRMU தலைமையில், "உள்ளிருப்பு போராட்டத்தை" நடத்தினர். தொடர்ந்து பணிமனைக் கோட்டச் செயலாளர் திரு. சஞ்சீவி அவர்களும், கிளை பொறுப்பாளர் திரு. பரத்குமார் AGS அவர்களும், தலையிட்டு RT பணிமனையின் OTA என்பது இன்சென்டிவ்க்கு நிகரானது என்பதை எடுத்துரைத்ததன் பெயரில் CWM அவர்கள் "OTA" நிறுத்த உத்தரவை திரும்ப பெற்றார்.**

# 2019-2020ம் ஆண்டிற்கான இந்திய ரயில்வேயின் சரக்குப் போக்குவரத்து 1.1%ம் பயணிகள் போக்குவரத்து 4.27%ம் சரிந்தது

பட்ஜெட்டுக்கு முன்பு 29-01-2021 அன்று நாடாளுமன்றத்தில் வெளியான பொருளாதார அறிக்கையில் 2018-2019 நிதி ஆண்டோடு, ஒப்பிடுகையில் இந்த ஆண்டு 3மது சரக்குப்போக்குவரத்து 1.1%ம் பயணிகள் போக்குவரத்து 4.2%ம் குறைந்துள்ளது.

2019-2020ம் ஆண்டில், 12084 லட்சம் "டன்" சரக்குகளையும், 80,857 லட்சம் பயணிகளையும் ஏற்றிச் சென்ற இந்திய ரயில்வே, "கோவிட் பேரிடர்" காரணமாக ஏப்ரல் 2020ல் சரக்கு போக்குவரத்து 35.3% குறைந்தாலும், செப்டம்பர் 2020ல் செப்டம்பர் 2019ஐவிட 15.% அதிகரித்து சாதனை படைத்து டிசம்பர் 2020ல் 118.13 மில்லியன் டன்னாக அதாவது சென்ற ஆண்டு கையாண்ட 108.84 மில்லியன் டன்னைவிட F (54%) அதிகம் கையாளப்பட்டது குறிப்பிடத்தக்கது.

---

**பொன்மலை செய்திகள் :**

## பொன்மலை பணிமனையில் குடியரசு தினவிழா







## AIRFன் தலைவராக "நமது பொதுச்செயலாளர். சகோ : டாக்டர். N.கண்ணையா அவர்களை பாராட்டி, கேரளத்தின் முன்னணி தினசரியான "மாத்ருபூமியில்" வெளியான செய்தி தொகுப்பு

Mathrubhumi
മാതൃഭൂമി

**ഡോ. എൻ. കണ്ണയ്യ എ.ഐ.ആർ.എഫ്. പ്രസിഡന്റായി ചുമതലയേറ്റു**

ഡോ. എൻ. കണ്ണയ്യ

30/01/2021 TRIVANDRUM Pg 15

**ഡോ. എൻ. കണ്ണയ്യ എ.ഐ.ആർ.എഫ്. പ്രസിഡന്റായി ചുമതലയേറ്റു**

ഡോ. എൻ. കണ്ണയ്യ

**സഹപ്രവർത്തകന്റെ വെടിയേറ്റ് സി.ആർ.പി.എഫ്. ജവാൻ മരിച്ചു**

ERNAKULAM | TRIPUNITHURA-MULANTHURUTHY

PALAKKAD | VADAKKANCHERY | MANNARKKAD

TRIVANDRUM | NEDUMANGAD | AATTINGAL







19.01.2021 அன்று புதுடெல்லியில் நடை பெற்ற "வண்ணமிகு நிகழ்ச்சியில் வாழ்நாள் சாதனையாளர் விருதை" இந்தியாவின் பெருமை மிகு அமைப்பான "பாரத் புரஸ்கார் அமைப்பு" நமது AIRF பேரியக்கத்தின் பொதுச்செயலாளர். சகோ. சிவகோபால் மிஸ்ரா அவர்களுக்கு வழங்கி கௌரவித்தது.



22.01.2021 அன்று புதுடெல்லியில் DOP & T துறையின் "இணை செயலாளர்" அவர்களை சந்தித்து "ரயில்வே, பாதுகாப்பு உள்ளிட்ட பல்வேறு துறைகளில் உள்ள தொழிலாளர்களுக்கு அடிப்படை "சம்பள உச்சவரம்பு" ஏதுமின்றி "இரவு நேரப் பணிக்கான படியை" (Night Duty Allowance" வழங்க வேண்டும் என வலியுறுத்திய நமது AIRF ன் பொதுச்செயலாளரும், JCM கூட்டமைப்பின் செயலாளருமான சகோ: S.G. மிஸ்ராஜி அவர்கள்.







## 2020 ம் ஆண்டுக்கான "65வது ரயில்வே வார விழா"வில் "பொது மேலாளரின்" (GM) அவர்களின் பாராட்டுக்களையும், விருதையும் பெறும் நமது சகோதர, சகோதரிகளை "SRMU" பேரியக்கம் பாராட்டுகிறது!

| S.No. | Name | Designation |
|---|---|---|
| | **Non - gazetted** | |
| | **Track maintainers** | |
| 1. | M. Sreeja | Trk. Maintainer-III, P.Way/Pay/PGT |
| 2. | Reena bemetra | Trk. Maintainer-II, SSE/P.Way/O/MPA/MDU |
| 3. | S.Maheswari Amma | Trk. Maintainer-IV, SSE/P.Way/O/MVUK/TVC |
| 4. | G Vijayamala | Trk. Maintainer-I, SSE/P.Way/O/WST/MAS |
| 5. | S. Ponnu samy | Trk. Maintainer-III, ADENO/EDISA |
| | **ARTISIANS/TECHNICIANS** | |
| 1. | Sitaram meena | Techn. STM/Wests/O/KRR/SA |
| 2. | N.K. Kishore lal | Blaksmith Helper, SSE/P.Way/O/KGQ/PGT |
| 3. | V. Rama Naik | Sr. Technician, EWSIAJJ |
| | **WELDER** | |
| 1. | P. M. Ahammed | Welder III, SSE/P.Way/O/OLD/PGT |
| | **SSEs/P.way** | |
| 1. | S.Sankara Parvathi | SSE/P.Way/MAS |
| 2. | T. Dhanyamol | SSE/P/Way/West/PGT |
| | **SSEs/JEs : Bridges** | |
| 1. | R. Elango | SSE/Bridge/East/TPJ@GOC |
| | **SSEs/JEs : Works** | |
| 1. | N.Swathi | SSE/Works/Land/PCE/O/MAS |
| 2. | B. Ramamoorthy | SSE/Works, PCE/O/MAS |
| | **SSEs/JEs : Workshop** | |
| 1. | M. Santhana Mariappan | SSE/Workshop, PCE/O/MAS |
| | **SSEs/JEs :** | |
| | **Design and Drawings** | |
| 1. | Harihar Soren | SSE/Drawing, PCE/O/MAS |
| | **Instructor** | |

| | | |
|---|---|---|
| 1. | S. Muthalagan | Instructor, SRCETC/TBM |
| | Ministerial | |
| 1. | Dhanya Purushothaman | Sr. Clerk, SSE/P.Way/O/KGQ |
| | **GROUP AWARD** | |
| **1.** | **SUPERVISORS AND STAFF OF TRACK MACHINE BCM 337** | |
| | Shri Radha Krishnan, | SSE/PGT &14 others |
| 1. | Kamal Kishore Giri | SSE/PGT |
| 2. | Jithin Mohan | SSE/PGT |
| 3. | Sridhar reddy | JE/PGT |
| 4. | Sithudas | JE/PGT |
| 5. | Vijaypal | Tech-III |
| 6. | Vijay Singh | Tech-III |
| 7. | Deepak Kumar | Tech-III |
| 8. | Rajhans | Tech-III |
| 9. | Anish Kumar | Helper |
| 10. | Vijay Kumar | Helper |
| 11. | Prakash Kumar Yadav | Helper |
| 12. | Silesh kumar | Helper |
| 13. | Chandrajeet kumar ram | Helper |
| 14. | Jitender Kumar | Helper |
| | **NON-GAZETED** | |
| 1. | Y. John Clement | SSE/P.Way/CN/MDU |
| 2. | R. Pushparaj | SSE/Works/GC/TPJ |
| | **NON -GAZETTED** | |
| 1. | Padmajan | SSE/Bridges/ERS |
| | **Mechanical (Non-gazeted)** | |
| 1. | B. Ravichandran | Sr. Tech (F)CDO/GSN/MAS |
| 2. | R. Radhakrishnan | H&MI Gr.I/TEN/MDU |
| 3. | P. Karthikeyan | Trimmer-II CDO/O/NCJ/TVC |
| 4. | N. Rajendran | Tech-I/C&W/MTP/SA |
| 5. | Selvkumar | Tech-I/EMU/AVD |
| 6. | Senthil Kumar | Sr.Tech/LW/PER |





| | | |
|---|---|---|
| 7. | P. Allimuthu | Sr.Tech. HERS/GOC |
| 8. | Arun Kumar Madavi | Sr.Tech/RS/EMU/CS/VLCY/MAS |
| 9. | K Rajendran | Sr.Tech/C&W/CCC/TPJ |
| 10. | G. Umapathy | Sr.Tech/RS/TBMMAS |
| 11. | P. S. Krishna Kumar | Tech.IC&W/SRR |
| | **ELECTRICAL** | |
| | **(NON GAZETTED)** | |
| 1. | M. Murali | LP/Mal/MAS |
| 2. | M. Rajesh Kumar | SSe/OHE/PGT |
| 3. | K. Balachandran | Sr.Tech/ELS/RS/ED |
| 4. | S. Senthil | JE/TRD/TJ |
| 5. | J. Archbald Jesudasson | Sr. Tech/Power/PLNI |
| 6. | A. Benddict | SSE/DS/Loco Shed/ED |
| 7. | S. Balachandran | PS/Gr.III/PCEE/O/MAS |
| 8. | Neeru Toppu | SSE/EL/RPM |
| 9. | P. Selvakumar | Loco Pilot/M/NCJ |
| 10. | A. Shahul Hameed | SSE/TRD/MDU |
| 11. | J. Shamnad | Asst. Operator/Power/VRI@Alu |
| 12. | S. Palanivelu | Sr. Tech/DSL/GOC |
| 13. | K.V. Rajan | SSE/Mech/DS/LERS |
| | Group Awards | |
| **1.** | **Shri M. Nantha Kumar, JE/ELS/AJJ & 9 others** | |
| 1. | A. Kirubanandhagiri | Sr. Tech/EL3/AJJ |
| 2. | G. Gopi | Sr. Tech/ELS/AJJ |
| 3 | S Ponnurangam | Sr. Tech/ELS/AJJ |
| 4. | K. Rajendran | Sr.Tech/EL/AJJ |
| 5. | B. Rajesh | Sr. Tech/Gr.ELS/AJJ |
| 6. | Sanjeet Kumar | Tech.Gr.I/ELS/AJJ |
| 7. | P. Srinivasan | Tech.Gr.ELS/AJJ |
| 8. | N. Pandian | Tech.Gr.I/ELS/AJJ |
| 9. | S. Senthilkumar | Tech/Gr.III/ELS/AJJ |
| | | அடுத்த இதழில் தொடரும் |

# ரயில்வே செய்திகள்

## குடியரசு தலைவரின் "பத்மஸ்ரீ" விருது பெற்ற சகோதரி P.அனிதா தெற்கு ரயில்வேக்கு கிடைத்த பெருமை பொதுச்செயலாளர் சகோ Dr.N.கண்ணையா பாராட்டு!



**நமது தெற்கு ரயில்வே மகளிர் கூடைப்பந்து விளையாட்டு வீராங்கனை சகோதரி P.அனிதா அவர்களுக்கு "குடியரசுத் தலைவரின்" பத்மஸ்ரீ விருது பற்றிய அறிவிப்பு "25.01.2021" அன்று இரவு "ராஷ்ட்ரபதி பவனில் இருந்து வெளியானது!**

மகிழ்ச்சியான இத்தகவலை சகோதரி P.அனிதா அவர்கள் நமது SRMU பேரியக்கத்தின் பொதுச் செயலாளர் Dr. N.கண்ணையா அவர்களிடம் *26.01.2021* அன்று அதிகாலை தெரிவித்து, **நமது பொதுச்செயலாளரின் ஆசியைப் பெற்றார்.**

**உடனடியாக இத்தகவலை, நமது பொதுச் செயலாளர் அவர்கள் AGS/N.சகோ.G.ஈஸ்வர்லால் அவர்களோடு பகிர்ந்து கொண்டதுடன் உடனடியாக இத்தகவலை பெரம்பூர் ரயில்வே ஸ்டேடியத்தில் "தேசிய கொடியை பறக்கவிட்டு, RPF அணிவகுப்பை ஏற்று, "தெற்கு ரயில்வே குடியரசு தின விழா" கொண்டாட்டங்களில் கலந்து கொள்ள வருகை தரும் நமது பொது மேலாளர் திரு.ஜான் தாமஸ் அவர்களுக்கு தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டதை அடுத்து, இத்தகவலை AGS/N அவர்களும் GM/S.Rly.க்கு தெரிவித்தார்.**

***18* ஆண்டுகள் தொடர்ந்து இந்திய தேசிய மகளிர் கூடைப்பந்தாட்ட அணியில் விளையாடியும், பல முறை "காப்டனாக" தலைமை தாங்கி சாதனைகள் பல படைத்த நமது சகோதரி P.அனிதா அவர்களை நாம் பாராட்டுவோம்.**





## HRMS குளறுபடிகள் தீரும்வரை "மானுவல்" பாஸ் / PTO வழங்க வேண்டும் என்ற SRMU / AIRF கோரிக்கை வெற்றி!

நூறாண்டு காலமாக "ரயில்வே தொழிலாளர்களுக்கும் ஓய்வு பெற்றோருக்கும்" தரப்படும் "Pass / P.T.O." க்களை கையால் எழுதி அல்லது கம்ப்யூட்டரில் பிரிண்ட் செய்து வழங்கி வந்த முறையை திடீரென மாற்றி, HRMS என்ற புதிய முறையில் "சம்பந்தப்பட்ட தொழிலாளர்கள்" ஓய்வு பெற்றோர் மொபைலில் "ஆப்" டவுன்லோடு செய்து பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற உத்தரவை (அதாவது 01-01-2021 முதல் பணியில் உள்ளவர்களுக்கும், *01-04-2021* முதல் ஓய்வு பெற்றவர்களுக்கும் என) ரயில்வே போர்டு வெளியிட்டது.

ஆனால் "HRMS" ல் Pass / P.T.O. க்கான குடும்ப உறுப்பினர் எண்ணிக்கையை சரியாக பதிவேற் றாததாலும், Net வசதி இல்லாத தாலும், OTP குளறுபடி என தொழிலாளர்கள் தங்களுக்கு உரிய Pass / PTO வாங்க முடியாமல் திணறினர். எப்படியோ வாங்கிய சிலரும், "PRS" முன்பதிவு, Pass Route ஆகியவை HRMSல் சரிவர செயய்ய முடியாததால் கைப்பணம் செலவிட்டு, முன்பதிவு செய்யும் கட்டாயத்திற்கு ஆளாகினர்.

பிரச்னை, **நமது பொதுச் செயலாளரும் AIRFன் தலைவரும் ஆகிய டாக்டர் N. கண்ணையா அவர்கள் கவனத்திற்கு வந்தவுடன் இதுகுறித்து 13-01-2021 அன்று AIRF** பொதுச் செயலாளருக்கு விளக்கமாக கடிதம் எழுதியதை தொடர்ந்து AIRF பொதுச் செயலாளரும் அன்றைய தினமே **HRMS** குளறுபடி குறித்து ரயில்வே போர்டின் மனிதவள துறையின் மெம்பர் (HM/HR) அவர்களுக்கு கடிதம் எழுதி நேரில் சந்தித்தார்!



AIRF/SRMU முயற்சியின் காரணமாக HRMS குளறுபடிகள் திரும் வரை அதாவது 28-02-2021 வரை முன்பு போலவே கையால் எழுதிய அல்லது கம்ப்யூட்டரில் பிரிண்ட் செய்யப்பட்ட Pass / P.T.O.க்களை வழங்க ரயில்வே போர்டு உத்தரவிட்டது.

ஆதாரம் : Ref. No. PC-VII/2020/HRMS/16 of Dy. Director, PC-VII & HRMS / Rly. Board letter dated 22-01-2021)

## 01-01-2004க்கு முன்பு தேர்வெழுதி 01-01-2004க்கு பிறகு பணியில் சேர்ந்தோருக்கு பழைய பென்ஷன் திட்டத்தில் சேர்ப்பது குறித்து ரயில்வே போர்டு புதிய விளக்கம்!

31-12-2013க்கு முன்பு ஏற்பட்ட காலியடங்களுக்கான தேர்வுகளில் 2013 & 2014ம் ஆண்டில் பங்கேற்று தேர்ச்சி பெற்று 01-01-2014க்கு பிறகு பணி நியமனம் பெற்றவர்களுக்கு NPSக்கு பதிலாக "பழைய பென்ஷன்" திட்டத்தில் சேர்ப்பது குறித்து OM No. 57/04/2019 P&PW(B)at 17-02-2021 என்று விளக்கமான கடிதத்தை மத்திய அரசின் DOP&T துறையின் பென்ஷன் பிரிவு வெளியிட்டது.

மேற்கண்ட கடிதத்திற்குப் பிறகும் ரயில்வே துறை "சில விளக்கங்களை" கேட்டதை தொடர்ந்து மீண்டும் 26-11-2021 அன்று DOP&T விளக்கம் அளித்துள்ளது.

**இதன்படி 17-01-2021 கடிதத்தில் குறிப்பிட்டுள்ளபடி, காலியிடங்கள் ஏற்பட்ட தேதி (31-12-2013க்கு முன்பு) மற்றும் இறுதி தேர்வு முடிவு வெளியான நாள் (Final Result Date)ஆகியவைகளின் அடிப்படையில், 01-01-2004க்கு பிறகு எப்போது பணி நியமனம் பெற்றாலும், புதிய பென்ஷன் (NPS) திட்டத்தில் இருந்து நீக்கி பழைய பென்ஷன் திட்டத்தில் சேர்க்கலாம்.**

ஆதாரம் : OM No. 57/1042019 P&PW CB) Dt. 26-11-2020







## அனைத்து ரயில்வே தொழிலாளர்களுக்கும் கோவிட் தடுப்பூசி போட AIRF வலியுறுத்தல்!

கோவிட்-19ஐ எதிர்கொள்ள கண்டுபிடிக்கப்பட்டுள்ள தடுப்பூசியை, முதற்கட்டமாக 16-01-2021 முதல் **முன்னணி அரசு ஊழியர்களுக்கு வழங்கும் திட்டத்தை நமது பிரதமர் அறிவித்துள்ளார்.**

இதன் காரணமாக ரயில்வே துறையில் முதற்கட்டமாக தடுப்பூசி போடப்படும் ஊழியர்களாக, ரயில்வே மருத்துவமனை டாக்டர்கள் செவிலியர்கள், மருத்துவமனை ஊழியர்கள் மற்றும் RPF காவலர்கள் மட்டுமே இருப்பார்கள் என்றும்,

தினமும் 10,000 சரக்கு ரயில்களையும், சிறப்பு பயணிகள் ரயில்களையும், இயக்குவதன் மூலம் பல தரப்பட்ட மக்களோட பழகும் **லோகோ பைலட்டுகள், கார்டுகள், SMகள், கமர்ஷியல் டிக்கெட் செக்கிங் ஊழியர்கள், பணிமனை/பராமரிப்பு டெப்போ ஊழியர்கள் (Med, Electrical S&T) உள்ளிட்டவர்களும், அதிகாரிகளின் வாகன ஓட்டுநர்கள் டெப்போக்களில் பணியாற்றும் பெர்சனல் அக்கவுண்ட்ஸ் மற்றும் ஊழியர்களுக்கும் தடுப்பூசி மறுக்கப்படும் சூழல் ஏற்படும் என்பதால்**

**அங்கீகரிக்கப்பட்ட யூனியனை கலந்து ஆலோசித்து, தடுப்பூசி வேண்டுவோரின் பட்டியலை தயாரிக்குமாறு GS/AIRF தனது 08-01-2021 கடிதம் மூலம் ரயில்வே போர்டை வலியுறுத்தி உள்ளார்.**

## HRMS/ E "PASS"

**கேட்பதற்கும் பயன்படுத்துவதற்கும் இனிமையாகவும், சுலபமாகவும் இருக்கும்!**

**ஆனால் AI எனப்படும் Artificial Intelligenceன் வளர்ச்சி பெர்சனல் துறை, அக்கவுண்ட்ஸ் துறை ஊழியர்களின் வேலை வாய்ப்பை பறித்திடவே என்பதை உணர்வீர்!**

# அவசர காலங்களில் "ரயில்வேயால்" அனுமதிக்கப்பட்டுள்ள தனியார் மருத்துவமனைகளில் சிகிச்சை பெற கடைபிடிக்க வேண்டிய விதிமுறைகள் ரயில்வே போர்டு விளக்கம்!

அவசர காலங்களில், ரயில்வேயால் **"அனுமதிக்கப்பட்டுள்ள தனியார் மருத்துவமனைகளில்"** சிகிச்சை பெறுவதில் உள்ள சிரமங்கள் குறித்து பணியில் உள்ள தொழிலாளர்களும், ஓய்வு பெற்றோரும் மீண்டும் மீண்டும் ரயில்வே போர்டுக்கு புகார் அனுப்புவதை தொடர்ந்து 28-12-2020 அன்று கடித எண். 2018/Tramcell / Health / CGHSCE No. 3270783) மூலம் கீழ்க்கண்ட விதிகளை கடைபிடிக்குமாறு அறிவுறுத்தப்பட்டுள்ளனர்.

**அவசர காலங்களில், ரயில்வேயில் பணியில் உள்ளோர் ஓய்வு பெற்றோர் ரயில்வேயால் அங்கீகரிக்கப்பட்டுள்ள எந்த தனியார் மருத்துவமனையில் வேண்டுமானாலும், எந்தவித பரிந்துரை கடிதங்கள் இன்றி "சிகிச்சை" பெறலாம். அதற்காக பணம் கட்ட வேண்டியதில்லை.**

**அவசர காலம் என்பது என்ன?** என்பது குறித்து மத்திய அரசின் CGHS பிரிவுக்கும் CGHS ஆல் அங்கீகரிக்கப்பட்ட தனியார் மருத்துவமனைக்கும் இடையே உள்ள **புரிந்துணர்வு ஒப்பந்தம்** (MOU) இந்திய ரயில்வேக்கும் பொருந்தும்.

சம்பந்தப்பட்ட மண்டல ரயில்வேக்கள் தங்கள் ரயில்வே தொழிலாளர்கள் / ஓய்வு பெற்றோரும் வழங்கி உள்ள "UMID & CTSE" **அடையாள அட்டைகளை அத்தாட்சியாக தனியார் மருத்துவமனைகள் ஏற்றுக் கொள்வதை உறுதி செய்து கொள்ள வேண்டும்.**

தனியார் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட பிறகு அனுமதிக்கப்பட்டவரின் உடல் நிலை **அவசர சிகிச்சைக்கு தகுதியானதாக இல்லை என ரயில்வே மருத்துவ அதிகாரிகள், கருதினால், சம்பந்தப்பட்ட நோயாளியை, ரயில்வே மருத்துவமனையில் சிகிச்சை பெற அனுமதிக்கலாம்.** அல்லது அவர்களது சொந்த செலவில் "அதே தனியார்" மருத்துவமனையில் சிகிச்சை பெறலாம்.





அவசர தேவை தானா? என்பதை உறுதி செய்து கொள்வது, சம்பந்தப்பட்ட ரயில்வே மருத்துவ அதிகாரி அல்லது அவர்களால் நியமிக்கப்பட்டவர்களின் பொறுப்பாகும்.

அவசர சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுள்ள, ரயில்வே தொழிலாளியின் விவரங்களை சம்பந்தப்பட்ட மருத்துவமனைகளை 24 மணி நேரத்திற்குள், அருகாமையில் உள்ள ரயில்வே மருத்துவமனைக்கு தகவல் தெரிவிக்க வேண்டும். அதேபோல, ரயில்வே மருத்துவமனையும், அடுத்த 24 மணி நேரத்திற்குள் பதில் தர வேண்டும் அல்லது மருத்துவமனைக்கு விரைய வேண்டும்.

ஒருவேளை, 24 மணி நேரத்திற்குள் வரவில்லை எனில், தனியார் மருத்துவமனைகள் அவசர சிகிச்சையாக கணக்கில் கொண்டு அதற்கான செலவை திரும்ப கேட்கலாம்.

ரயில்வே மருத்துவமனையும், தனியார் மருத்துவமனையும், தங்களுக்குள் தகவல் பரிமாற்றம் செய்து கொள்ள தேவையான மின்னஞ்சல் விலாசம் (Email ID) இணைய தளம் (Website) மற்றும் அலைபேசி எண்களை முறையாக பகிர்ந்து கொள்ள வேண்டும்.

அனுமதிக்கப்பட்டுள்ள தனியார் மருத்துவமனைகள் அனுமதி பெற்றுள்ள தொழிலாளியின் சிகிச்சைக்கு தேவையான செலவு பட்டியலை (Package) சிகிச்சை நாட்களை, ரயில்வே மருத்துவமனைக்கு தெரியப்படுத்துவதுடன், கூடுதல் நாட்கள் செலவு குறித்து தெரிவித்து ஒப்புதல் பெற வேண்டும்.

**ஒருவேளை சிகிச்சைக்கு வரும் தொழிலாளியின் நிலை, அவசர சிகிச்சைக்கு தேவை அற்றது என தீர்மானித்து புற நோயாளியாக (Out Patient) கவனிக்கப்பட்டால், அதற்கான சிகிச்சை அளித்தால், சிகிச்சை செலவை சம்பந்தப்பட்ட தொழிலாளியிடமே பெற்றுக் கொள்ள வேண்டும்.**

**அவசர காலங்களில் பணம் வாங்காமல் ரயில்வே ஊழியர் / ஓய்வூதியதாரரை சிகிச்சைக்கு அனுமதிக்க மறுக்கும் தனியார் மருத்துவமனைகளின் உரிமத்தை ரத்து செய்யவேண்டும்.**





# SRMU / AIRF செய்திகள்

## பிப்.1-ம் தேதி அன்று AIRF/SRMU தலைமையில் மத்திய அரசுக்கு எதிராக "நாடுதழுவிய" ரயில்வே உள்ளிட்ட அனைத்து மத்திய அரசு ஊழியர்களின் "கவன ஈர்ப்பு போராட்டம்!"

கோவிட்-19, பேரிடரை, பயன்படுத்தி, ரயில்வே உள்ளிட்ட மத்திய அரசு ஊழியர்களின் மீது "1 நாள் சம்பள பிடித்தம்! 18 மாத DA முடக்கம்! OTA, TA, NDA, Transport Allowance என நாம் போராடி, தியாகங்கள் பல செய்து பெற்ற "உரிமைகள் ஒவ்வொன்றையும் பறித்து விட்ட மத்திய அரசு,

நாடாளுமன்றத்தில், விவாதமே இன்றி, 44 தொழிலாளர் நல சட்டங்களை "நான்கு கோடுகளாக" மாற்றி தொழிற்சங்க அமைப்பு உரிமை, கூட்டு பேர உரிமை, அங்கீகாரம் போன்ற அடிப்படை உரிமைகளை நசுக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது.

கார்ப்பரேட்டுகளுக்கு சாதகமாக நிரந்தர வேலை வாய்ப்பை பறித்து தொழிலாளர்களை, ஒப்பந்த ஊழியர்களாகவும் (Contract Labourers) குறிப்பிட்ட கால (Fixed Term) ஊழியர்களாக மாற்ற சட்டமியற்றி உள்ளது.

இதுமட்டுமல்லாமல் **மத்திய அரசின் "ரயில்வே துறையை" விரைவு ரயில்களையும், சரக்கு ரயில்களையும் தனியாரே ஓட்ட அனுமதிப்பது, ரயில் நிலையங்களை விற்பது,உற்பத்தி/பராமரிப்பு பணி மனைகளை "கார்ப்பரேஷனாக்கி"** தனியாருக்கு தாரை வார்ப்பது என்ற முடிவோடு, **2023ம் ஆண்டு தொடங்கி சுமார் 7 லட்சம் நிரந்தர ரயில்வே தொழிலாளர்களின் வேலை வாய்ப்பை பறிக்க மத்திய அரசு திட்டமிட்டு செயலாற்றுகிறது!**

அதே போல **"பாதுகாப்பு துறையில் ராணுவத்துக்கு வேண்டிய ஆயுத, தளவாடங்களை தயாரிக்கும் 42 ஆயுத தொழிற்சாலைகளை** (Ordinance Factories& Ordinace Boardகளை) **தனியார்/பன்னாட்டு நிறுவனங்களுக்கு விற்று வருகிறது**

**மத்திய அரசின் தொழிலாளர், பொருளாதார கொள்கைகள் முற்றிலும் தவறானவை என்றும், தேச ஒற்றுமை & பொருளாதாரத்தை சீர்குலைத்துவிடும் என்பதை உணர்த்த "50 லட்சம் ரயில்வே உள்ளிட்ட மத்திய அரசு ஊழியர்கள், 01.02.2021 அன்று, அதாவது மத்திய அரசின் பட்ஜெட் தாக்கல் செய்யப்படும் நாளன்று கவன ஈர்ப்பு போராட்டம் நடத்துவது** என AIRF தலைமையில் அனைத்து JCM சங்கங்கள் அழைப்பு விடுத்துள்ளது.

**இதன்படி, SRMU பேரியக்கத்தின் பொதுச் செயலாளரும், AIRFன் அகில இந்திய தலைவருமான Dr.N.கண்ணையா அவர்கள் வேண்டுகோளுக்கிணங்க, தெற்கு ரயில்வே முழுவதும் "ஆயிரக்கணக்கானோர்" அணி திரண்டு SRMU தலைமையில் போராட்டங்கள் நடத்தினர்.**







## கார்ப்பரேட் கைகளில் செல்லும் இந்திய ரயில்வே நிதி கழகம் (IRFC)

**இந்திய ரயில்வேயை தனியாருக்குத் தாரை வார்க்க முடிவு செய்துள்ள மத்திய அரசு ஏற்கனவே இந்திய ரயில்வேயின் 100% முதலீட்டில் ஆரம்பிக்கப்பட்ட பல்வேறு "கார்ப்பரேஷன்களின்" பங்குகளை "பங்கு சந்தை" மூலமாக தனியார் கார்ப்பரேட், பொது மக்களுக்கு என விற்க தொடங்கி உள்ளது.**

**பொதுமக்களுக்கு என்பது வெறும் காகிதத்தில்தான், 95% பங்குகளை பன்னாட்டு, உள்நாட்டு தனியார் / கார்ப்பரேட்டுகள்தான் வாங்குகின்றனர். CONCOR, RVNL, RITES ஆகியவற்றின் பங்குகளை விற்றுவரும் மத்திய அரசு IRFCயின் 119 கோடி பங்குகளை சுமார் ரூ. 4633 கோடி ரூபாய்களுக்கு ஜனவரி 18 முதல் ஜனவரி 20 வரை விற்றுள்ளது.**

## மத்திய அரசே!
## மத்திய அரசு ஊழியர்களுக்கும் ஒய்வூதியதாரர்கள்/ குடும்ப ஒய்வூதியதாரர்களுக்கு வழங்க வேண்டிய மூன்று DAக்களை உடனே வழங்கிடு!
## JCM செயலாளர் சகோ. S.G. மிஸ்ரா கோரிக்கை!

16-01-2021 அன்று புதுடெல்லியில், **மத்திய அமைச்சரவையின் செயலாளர் திரு. ராஜீவ் கௌபா அவர்களை, AIRFன் பொதுச் செயலாளரும், ரயில்வே உள்ளிட்ட மத்திய அரசு ஊழியர் சம்மேளனங்களின், "JCM" செயலாளர் திரு. S.G. மிஸ்ராஜி அவர்கள் நேரில் சந்தித்தார்.**

கோவிட் பேரிடரை காரணம் காட்டி, **ஜனவரி 2020ல் இருந்து வழங்க வேண்டிய 4% DAஐ 18 மாதங்களுக்கு அதாவது ஜீலை 2021 வரை முடக்கியது என்றும், அதன் பிறகு ஜூலை 2020ல் மேலும் 4%ம், ஜனவரி 2021ல் 3% DA உயர்ந்துள்ள சூழலில், விலைவாசி உயர்வு காரணமாக மத்திய அரசு ஊழியர்கள், ஓய்வூதியதாரர்கள், குடும்ப ஓய்வூதியதாரர்கள் கடும் அவதிக்குள்ளாகி இருப்பதாக அவர் தெரிவித்தார்.**

தற்சமயம், **நிலைமை சீராகி GST வரி வருவாய், கோவிட்க்கு முன்பு இருந்ததை விட அதிகரித்து மாதம் 1 லட்சம் கோடியை தாண்டியுள்ள சூழலில், DA முடக்கத்தை தொடர்வது "பொருளாதாரம் சீராகிவிட்டது" என கூறிவரும் மத்திய அரசின் நிலைப்பாட்டுக்கு எதிரானது என கூறி, வருகிற பட்ஜெட்டில் DAக்களை பட்டுவாடா செய்ய பரிந்துரைக் குமாறு கேட்டுக் கொண்டார்.**





## 31-03-2021 வரை கிடப்பில் போடப்பட்டுள்ள பீரியாடிக்கல் இடமாற்றத்தை 31-03-2022 வரை நீட்டிக்க AIRF கோரிக்கை!

கோவிட் பேரிடர் காரணமாக, ஊரடங்கு அமல்படுத்தப்பட்டு, பள்ளி, கல்லூரிகள், அரசு அலுவலர்கள் ஆகியவை மூடப்பட்டு அரசு நிபந்தனைக்கு உட்பட்டு செயல் படுவதால், ஒவ்வொரு ஆண்டும் மார்ச் 31க்குள் வெளியிடப்படும் பீரியாடிக்கால் இடமாற்ற உத்தரவை **31-03-2021** வரை கிடப்பில் (Pend) போட வேண்டும் என SRMU/AIRF முன்வைத்த கோரிக்கையை ஏற்று ரயில்வே போர்டு, அனைத்து பீரியாடிக்கல் இடமாற்றல் உத்தரவுகளையும், **31-03-2021 வரை நிறுத்தி வைத்துள்ளது.**

தற்சமயம் நிலைமையில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டாலும், மீண்டும் பரவி வரும் உருமாறிய கொரோனா, தடுப்பூசி போடும் பணிகள், இன்னமும் பள்ளி / கல்லூரிகள் முழுமையாக இயங்காத சூழ்நிலையில் ரயில்கள் கூட முழுமையாக ஓடாத நிலையில், பீரியாடிக்கல் இடமாற்றம் இப்போதைக்கு அவசியமில்லாதது என்றும், **31-03-2021க்கு "முன்பும், பின்பும்" இடமாற்ற உத்தரவை வெளியிட வேண்டாம் என்றும் ரயில்வே போர்டை AIRF வலியுறுத்தியுள்ளது.**

**2020-2021ம் ஆண்டின் 3வது காலாண்டில் IRCTCயின் லாபம் 62% சரிந்து ரூ. 78 கோடியாக" குறைந்தது. இதன் விளைவாக பங்கு சந்தையில் IRCTCயின் விலை குறையும். தனியார்மயம் ரயில்வேயின் ஒவ்வொரு துறையையும் எப்போது எவ்வாறு பாதிக்கும் என கணிக்க இயலாத சூழல் ஏற்படும்.**

## உமிட் (UMID) அடையாள அட்டையுடன் Digital Health Passport Card வழங்குவதுடன் கோவிட்-தடுப்பூசி போட்டுக் கொள்பவர்களுக்கு SCL வழங்கு - AIRF கோரிக்கை!

கோவிட் பெருந்தொற்றுக்கு எதிரான தடுப்பூசிகள் போடும் பணிகள் ரயில்வே துறையிலும் துவங்கி உள்ள நிலையில், அவ்வாறு போடபப்படும், தடுப்பூசிகள் 2 தவணைகளில் அதாவது முதல் தடுப்பூசி போட்டு 28 நாட்கள் கழித்து 2வது ஊசி போடுவதுடன் 2வது ஊசி போடப்பட்ட, **14 நாட்கள் கழித்தே அதன் வீரியம் முழுமையாக தெரியும் என சொல்லப்படுகிறது.**

தடுப்பூசி காரணமாக, தலைசுற்றல் (Giddiness) இரத்த கொதிப்பு (BP) வாந்தி எடுத்தல், வயிற்றுபோக்கு என பின்விளைவுகள் ஏற்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டால், அந்த **காலகட்டத்திற்கு SCL வழங்க வேண்டும் என AIRF கோரிக்கை வைத்துள்ளது.**

அத்துடன், வெற்றிகரமாக தடுப்பூசி போட்டுக் கொண்டவர்களின் முழு உடல்நிலை தகுதியை மின்னணு சுகாதார அட்டையில் (Digital Health Passport Card) பதிவு செய்து வழங்கப்பட்டு சம்பந்தப்பட்ட தொழிலாளி வழக்கமான மருத்துவ சிகிச்சைக்கு தேவையான "உமிட்" (UMID) அடையாள அட்டையை உடன் எடுத்துச் செல்லும் வகையில் அமைய வேண்டும் என GS/AIRF ரயில்வே போர்டை கேட்டுள்ளார்.

**28-02-2021 வரை மட்டுமே Manual Pass என்பதை காலவரையின்றி HRMS குளறுபடிகள் சரியாகும் வரை நீட்டிக்க AIRF வலியுறுத்தல்.**





## டிராக் மெயின்டெய்னர்கள் பதிவு மூப்பின் அடிப்படையில் மற்ற துறைகளுக்கு 10% இடமாற்றத்தில் செல்வதை 20% ஆக உயர்த்துவது குறித்து ரயில்வே போர்டு கெடு - SRMU யோசனை

சமீபகாலமாக RRC தேர்வுகளில் அதிகபட்ச கல்வித்தகுதி உடைய சகோதர, சகோதரிகள் பெருமளவில் தேர்வு பெறுவதுடன், **மதிப்பெண்கள் அடிப்படையில் (Merit Order) முன்னுரிமை பெறுவதால், அதிக மதிப்பெண்கள் பெற்றவர்கள், டிராக்மெயின் டெய்னர்களாகவும், மதிப்பெண் பட்டியலில் பின்தங்கியவர்கள் (Lower in Merit Order) டிராபிக், மெக்கானிக்கல், எலக்ட்ரிக்கல் பிரிவுகளில் வேலை பெறுகின்றனர்.**

இதன் காரணமாக, **உடல் உழைப்பு அதிகம் தேவைப்படும். டிராக்மெயின் டெய்னர் பதவிகளில் உள்ளவர்களுக்கு சதவிகித அடிப்படையில் பதவி உயர்வு, பணியில் உள்ள சிரமங்கள் மற்றும் ஆபத்துக்களை (Risk & Hardship) கணக்கில் கொண்டு கூடுதலாக மாதம் ரூ.2700 அலவன்சு, கேட்களில் பணிபுரிந்தால், மாதம் ரூ2700+ ரூ.1000 என ரூ. 3700 சிறப்பு ஊதியம் மற்றும், GDCE தேர்வுகள் மூலம் வேறு கேட்டகிரிகளுக்குச் செல்லும் வாய்ப்புகளை SRMU/AIRF பெற்றுக் கொடுத்தாலும், டிராக் மெயின்டெய்னடர் பணியில் இருந்து மற்ற துறைகளுக்கு செல்லும் வாய்ப்பை தொடர்ந்து கேட்பதால்,** ரூ.1800/-GPல் /Level 1 பதவிகளில், P.Way / Track Maintainer தவிர்த்த மற்ற கேட்டகிரிகளில் உள்ள RRC மூலம் நிரப்பப்படும், நேரடி நியமன கோட்டாவில் **10% ஐ டிராக் மெயின்டெய்னர் இடமாற்றம் மூலம் நிரப்பும் வாய்ப்பை SRMU/ AIRF 2018ல் பெற்றுக் கொடுத்தது.**

ஆயினும் **10% கோட்டாவை உயர்த்த வேண்டும் என SRMU / AIRF வலியுறுத்தி வந்ததால் வேறு**





துறைகளுக்கு செல்லும் கோட்டாவை 20% ஆக உயர்த்துவது என ஒப்புக் கொள்ளப் பட்டது.

**20% ஐ எவ்வாறு நடைமுறைப் படுத்துவது என்பது குறித்து SRMU யோசனை!**

இதன்படி, எல்லா துறைகளிலும் Pway Track Maintainer) தவிர உள்ள Level 1 (Rs. 1800/-GP) நேரடி நியமன கோட்டா பதவிகள் நிரப்பப்படும் போது 20% பதவி களை டிராக் மெயின்டெய்னர் இடமாற்றம் மூலம் மட்டுமே நிரப்ப வேண்டும் என்றும்,

டிராக்மெயின்டெய்னர்களாக Level 1 & Level 2ல் உள்ளவர்களை (Rs. 1800/- GP & Rs. 1900/GPல்) இடமாற்றத்தில் செல்ல அனுமதிக்க வேண்டும்.

இடமாற்றத்திற்கு பதிவு செய்யும் "டிராக்மெயின்டெய்னர்" களில் சகோதர, சகோதரிகளின் சீனியா ரிட்டி தனித்தனியாக கணக்கில் கொண்டு 1:1 என்ற முறையில் அதாவது ஒரு சகோதரன் இடமாற்றத்தில் சென்றால், அடுத்த வாய்ப்பு ஒரு சகோதரிக்கு என சம வாய்ப்பு தரப்பட வேண்டும்.

பணிமனைகளில் (Workshop)ல் உள்ள Level 1 பதவிகளில் 20% பதவிகளுக்கு அருகில் உள்ள கோட்ட டிராக்மெயின்டெய்னர்களுடன், ஸ்டோர்ஸ் பிரிவு ஹெல்பர்கள் மற்றும் மருத்துவமனை, "சுகாதார, உதவியாளர்கள் பதிவு செய்து இடமாற்றத்தில் செல்ல அனுமதிக்க வேண்டும் என்றும்,

RRC தேர்ச்சி பெற்றோர் பட்டியல், பணி நியமனத்துக்காக கோட்டங்களுக்கு அனுப்பப்படும் போது சம்பந்தப்பட்ட DRM கள் 20% இடமாற்றத்திற்கு பதிவு செய்தோர் அனைவரும் பயன் பெறுவதை உறுதி செய்ய PWay டிராக்மெயின்டெய்னர் பதவி களுக்கு முன்னுரிமை கொடுத்து நிரப்ப வேண்டும் ஆகிய,

SRMU ன் கருத்துக்களை நமது பொதுச் செயலாளர் Dr. N.கண்ணையா அவர்கள், AIRF மூலமாக ரயில்வே போர்டுக்கு 20-01-2021 அன்று கடிதம் மூலம் தெரிவித்துள்ளார்.





## "ரயில்வேயை காப்போம்" - "தேசத்தை காப்போம்"
## சமூக பாதுகாப்புடன் கூடிய ஓய்வூதியத்தை வென்றெடுப்போம் என்ற நமது போராட்டத்தில் வெற்றி பெற சபதமேற்போம்!
## புத்தாண்டு AIRF பொதுச் செயலாளர் சகோ. S.G. மிஸ்ராஜி அவர்கள் முழக்கம்!

2021 புத்தாண்டு ரயில்வே சகோதர, சகோதரிகளுக்கு ஒரு சவாலான ஆண்டாக இருக்கும்.

"இந்திய ரயில்வே எதிர்காலத்தில் எப்படி செயல்படும்" என்பதை மத்திய அரசு முடிவு செய்யும் ஆண்டாக இருக்கும் என்று AIRF பொதுச் செயலாளர் சகோ. S.G. மிஸ்ராஜி அவர்கள் தனது புத்தாண்டு செய்தியில் தெரிவித்துள்ளார்.

எனவேதான், AIRF சார்பாக புத்தாண்டின் அன்றே, சமூக பாதுகாப்புடன் கூடிய ஓய்வூதியத்தை (Old Pension Scheme) அனைவருக்கும் வலியுறுத்தி சமூக வலைதளங்கள் மூலமாக பிரதமருக்கும் ரயில்வே அமைச்சருக் கும், செய்திகள் அனுப்பும் நாடு தழுவிய இயக்கத்தை ஜனவரி 1, 2020 அன்றே நமது சகோதர, சகோதரிகள் நடத்த வேண்டும் என நான் விடுத்த அழைப்பை ஏற்று நீங்களும், மிகப்பெரிய அளவில் நமது உரிமைக்குரலை எழுப்பினீர்கள்.

அதேபோல, ரயில்வே தனியார்மயம் என்பது, ரயில்வே தொழிலாளர்களை மட்டும், பாதிக்கப்போவதில்லை நம்மை விட அதிகமாக பொதுமக்களையும் பயணிகளையும் பாதிக்கும் என்ற உண்மையை மக்களின் மத்தியில் உணர வைக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்தியாவில் உள்ள 7600 ரயில்வே நிலையங் களிலும், பொதுமக்கள் விழிப்புணர்வு இயக்கம் ஏற்படுத்தி நமது ரயில்வே சகோதர, சகோதரிகளும், பொது மக்கள் பிரதிநிதிகளும் அடங்கிய ரயிலை காப்போம்! தேசத்தைக் காப்போம் ரயில் நிலைய கமிட்டியை

**30-01-2021க்குள் ஏற்படுத்த AIRF எல்லோரையும் கேட்டுள்ளது.**

**எல்லா பிரச்சனைகளுக்கும் மத்தியில், AIRF மற்றும் நமது இணைப்பு மண்டல யூனியன்களின் நம்பிக்கையாய் திகழ்வது சுமார் 7 லட்சம் இளைஞர்தான்!**

அதிலும், 2004க்குப் பிறகு, ரயில்வேயில் பணியில் சேர்ந்த நமது, சகோதர, சகோதரிகள், ரயில்வே தனியார்மயம் NPSஐ ஒழித்து, பழைய ஓய்வூதியத்தை பெற 1974ல் நடைபெற்ற வேலை நிறுத்தத்தைப் போல ஒரு பெரும் இயக்கம் நடத்த, AIRF தலைமையில் தயாராகி வருகின்றனர்.

2021 புத்தாண்டில், மறைந்த, AIRFக்கு வழிகாட்டியாக இருந்த தலைவர் **ஸ்ரீ ரகோல்தாஸ் குப்தா, இன்று நம்மிடையே இல்லை என்ற வருத்தத்தோடு ஆரம்பித்தாலும், புதிதாக தலைமை பொறுப்பேற்றுள்ள துடிப்பும், செயலாற்றலும் மிக்க எனது இளை சகோதரர் டாக்டர் N. கண்ணையா அவர்கள் என்னோடு இணைந்து இந்திய ரயில்வேயை பாதுகாக்க AIRF எடுக்கும் முயற்சிகள் வெற்றிபெற பாடுபடுவார் என்ற உறுதியோடு உங்களின் பேராதரவுடன் வெற்றி பெறுவோம் என புத்தாண்டு செய்தியில் திரு. S.G. மிஸ்ரா தெரிவித்துள்ளார்.**

**வருகிறது "BOOK BAGGAGE" "AAP" IRCTCன் "STARTUP" ஆக துவக்கப்படும். இந்த "AAP"ல் பதிவு செய்தால் ரயில் பயணிகளின் "லக்கேஜ்களை" வீட்டிலிருந்து ரயிலுக்கும், ரயிலில் இருந்து வீட்டிற்கும், "டெலிவரி" செய்வார்கள். "ஸ்டேஷன் போர்ட்டர்கள்" வேலையும் "அம்போதான்"**





# SRMU முயற்சியால் 7 உயர் பதவிகள் சரண்டரில் இருந்து தப்பியது

50%தான் - சேஃப்டி பதவிகளை சரண்டர் செய்ய வேண்டும் என்று கோவிட் பேரிடர் காலத்தில், ரயில்வே போர்டு வெளியிட்ட உத்தரவை கண்மூடித்தனமாக பின்பற்றாமல் பதவி உயர்வுகள் பாதிக்காத வண்ணமும், எதிர்கால தேவைகளை கருத்தில் கொண்டும் முடிவு எடுக்க வேண்டும் என **SRMU பொதுச்செயலாளர் சகோதரர் டாக்டர் N.கண்ணையா** அவர்கள், **பொது மேலாளருக்கு** கடிதம் எழுதியதுடன், பெரம்பூர் லோகோ பணிமனையில் BTC பயிற்சியாளர் பதவிகள் 4ம் (லெவல் 4 ரூ. 2400GP) Progress பிரிவில் Sr. Tech 1ம் Progress பிரிவில் Chief Typist பதவிகள் (லெவல் 6 ரூ. 4200GP), MRP Section Sr. Clerk பிரிவில் 1ம் (லெவல் 5 ரூ. 4200GP) **மொத்தம் 7 பதவிகள் தவறாக சரண்டர் செய்யப்பட்டுள்ளது என்பதை சுட்டிக் காட்டியவுடன், உயர் பதவிகளை சரண்டர் செய்ததை ரத்து செய்து லெவல் 1ல் 2 பதவிகளையும், லெவல் 2 ல் 5 பதவிகளையும் சரண்டர் செய்து நிர்வாகம் உத்தரவிட்டது. இதன் காரணமாக 7 பதவிகள் பாதுகாக்கப் பட்டதுடன், சுமார் 17 பேரின் பதவி உயர்வு காப்பாற்றப்பட்டது.**





# ALPக்கள் IDT / IRT இடமாற்றம் குறித்து "தெற்கு ரயில்வே" நிர்வாகத்தின் தன்னிச்சையான முடிவு SRMU கடும் கண்டனம்!



SOUTHERN RAILWAY

Headquarters Office,
Personnel Branch,
Chennai - 600 003
Dated: 30/11/2020

No.P(S)676/IV/TPO/2020

DRM/MAS, TPJ, MDU, SA, PGT, TVC
Sr.DPO's/ MAS, TPJ, MDU, PGT, TVC
DPO/SA

विषय Sub: Revised Transfer Policy of ALP- IDT/IRT reg

In pursuance to the recommendation of SAG Officers Committee comprising of CPO/IR, CELE and CTPM on the above subject, General Manager has accorded approval for the following revised transfer policy, in respect of ALP cadre.

a. Out of the total/net ALP vacancy in a Division, 75% shall be filled up from DR Quota (RRB candidates) and the balance 25% quota may be filled through IDT/IRT process.

b. Minimum 5 years service is required to register IDT/IRT as against the present requirement of 3 years.

All divisions are advised to adhere to the above instructions scrupulously and uniformly with immediate effect.

The above instruction may be given wide publicity.

30-11-2020
(R.M. Ravi Kumar)
Dy. Chief Personnel Officer/T&C
for Principal Chief Personnel Officer

Copy to: PCOM, PCEE, PCME, PFA, CPTM, CELE, CMPE/DSL for kind formation
Sr.DEE/OP's of all Divisions for information.
The Genl. Secy/SRMU, AGS/NFIR,
The Genl. Secy AISC/STIREA
The Genl. Secy AIOBCREA

ALPக்கள் IDT & IRT இடமாற்றத் திற்கு **குறைந்தபட்சம் 3 வருட சர்வீஸ் முடித் திருக்க வேண்டும் என்ற நிபந்தனையை 5 வருடங்கள்** என உயர்த்தியதுடன் ஒவ்வொரு கோட்டத்திலும் உள்ள மொத்த ALP பதவிகளில் **வெறும் 25% மட்டுமே IDT/IRT இடமாற்றம் மூலம் நிரப்பப்பட வேண்டும் என்றும், மீதமுள்ள 75% காலியிடங்களை RRB நேரடி நியமனம் மூலம் மட்டுமே நிரப்ப வேண்டும்** என CELE, CPO/IR & CTPM ஆகிய அதிகாரிகள் அடங்கிய கமிட்டி பரிந்துரைத்ததை ஏற்று PCPO நிர்வாகம் உத்தரவு வெளியிட்டுள்ளது.

PCPO வின் இந்த உத்தரவு தன்னிச்சையானது என்றும், அங்கீகரிக்கப்பட்ட ஒரே யூனியனான SRMUவை கலந்து ஆலோசிக்காமல் இதுபோன்ற விதிமுறைகள் வெளியிடுவது தவறு என்றும், உடனடியாக விலக்கி கொள்ளப்பட வேண்டும் என்று PCPOவுக்கு கடிதம் எழுதி உள்ளார் நமது பொதுச் செயலாளர் டாக்டர் N.கண்ணையா அவர்கள்.







# மறைந்த "தொழிற்சங்க தலைவர் முன்னாள் "அகில இந்திய ரயில்வே தொழிலாளர் சம்மேளனத்தின்" தலைவர் சகோ. ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களின் புகழ் நீடூழி வாழ்க!

சகோ : ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களின் (ஜனவரி 29. 2019 ல் காலமான) நினைவு நாள் செய்தியில் AIRFன் தலைவர் டாக்டர். N.கண்ணையா அவர்கள்,

2019 ஆம் ஆண்டு, ஜனவரி 29 ம்தேதி காலமான முன்னாள் மத்திய அமைச்சரும், சமதா கட்சியின் தலைவரும், எல்லாவற்றுக்கும் மேலாக, ரயில்வே தொழிலாளர் களின்" போனஸ் நமது பிறப்புரிமை"என்ற 1945 முதல் "AIRF" தலைவர்களால் எழுப்பப் பட்டு வந்த "போனஸ் கோரிக்கைக்கு செயல் வடிவம் கொடுத்தவருமான நமது மறைந்த தலைவர் ஜார்ஜ் பெர்ன்னாண்டஸ் அவர்கள்,

தமது வழிகாட்டியும், SRMU பேரியக்கத்தின் ஒப்பற்ற தலைவரும், போனஸ் வேலை நிறுத்த போராட் டத்தை" "தென்னகத்தில் தலைமை தாங்கி நடத்தியவருமான" நமது தஞ்சை சிங்கம், தானைத் தலைவர். "ஐயா நமச்சிவாயம் அவர்களால்" சகோதரர் ஜார்ஜ் (Brother George) என அன்புடன் அழைக்கப்பட்ட "ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்கள்" 1973 ஆம் ஆண்டு, செகந்திராபாத்தில் நடை பெற்ற AIRF ன் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டதை நினைவு கூர்ந்தார்.

தலைவராக பொறுப்பேற்ற "அன்றே" ரயில்வே தொழிலாளர் களின் போனஸ் கோரிக்கையை வென்றெடுப்பதே தமது லட்சியம் என சபதமேற்றது மட்டுமல்லாமல், NCCRS என்ற "ரயில்வே தொழிலாளர் களின் தேசிய கூட்டு போராட்டக் குழுவை" ஏற்படுத்தி அகில இந்திய அளவில் AIRF தலைமையிலும், மண்டல ரயில்வேக்களில் SRMU போன்ற AIRF ன் இணைப்பு



சங்கங்களின் தலைமையில் "அங்கீகார "NFIR" உள்ளிட்ட "அங்கீகாரமற்ற சங்கங்கள், அசோசியேஷன்கள்" என சுமார் 109 அமைப்புகளை ஒன்றுபடுத்தி, **மே.8, 1974 முதல் "நாடு தழுவிய கால வரையற்ற பொது வேலை நிறுத்தத்திற்கு" அறைகூவல் விடுத்து"ஸ்டிரைக் நோட்டீசும் வழங்கினார்.** (போராட்டம் துவங்கும் முன்பே" துரோக, கைக்கூலி "சங்கத்தின்" NFIR போராட்டத்தை காட்டிக் கொடுத்த வரலாறு உலகறிந்ததே")

ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை "இரும்புக் கரம் கொண்டு அடக்க தீர்மானித்த" அன்றைய பிரதமர். இந்திராவின் காங்கிரஸ் அரசாங்கம் நமது வேலை நிறுத்தத்தை "சட்ட விரோதமென" அறிவித்து "ESMA" (Essential Serrvices Maintanence Act) **சட்டத்தின் கீழ் மே.1ம்தேதி நள்ளிரவு ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களை கைது செய்த தகவலும், அவரோடு கைது செய்யப்பட்ட "மத்திய ரயில்வே தொழிலாளர் யூனியனின் (NRMU(CR)) பொதுச் செயலாளர். சகோ: சுபாஷ் மால்கி அவர்கள் போலீஸ் அடி உதையில் காவல் நிலையத்திலேயே" வீரமரணம் அடைந்த செய்திகள், மே 2ம் தேதி காலையில் வெளியான உடனேயே, AIRF தீர்மானித்த மே.8 வரை காத்திராமல் "மே.2 ம் தேதியே நமது SRMU பேரியக்கத்தின் பொதுச்செயலாளர் ஐயா நமச்சிவாயம் அவர்கள் வேலை நிறுத்தத்தை துவக்கினார் என்பதை எல்லோரும் அறிவர்!**

போராட்டம் முடிவிற்கு வந்து AIRF உள்ளிட்ட நமது SRMU சங்க அங்கீகாரங்களை "பறித்து விட்ட மத்திய அரசு, AIRFன் அங்கீகாரம் திரும்ப தர, சகோ: ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களை தலைவர் பொறுப்பில் இருந்து நீக்க வேண்டும் என்ற "நிபந்தனையை" விதிக்க அதனை 1976ல் ஏற்ற AIRF மீண்டும் அங்கீகாரம் பெற்று வேலை இழந்த, இடைநீக்கம் செய்யப்பட்ட, சிறை புகுந்த லட்சக்கணக்கான ரயில்வே தொழிலாளர்களை காக்க பாடுபட்டது.

**ஆனால், நம்மை போராட்டத்திற்கு வழிநடத்திய "சகோ: ஜார்ஜ் அவர்களை" தியாகம் செய்த AIRF முடிவை ஏற்றுக் கொள்ளாமல், SRMU பேரியக்கத்தின் "தலைவராக" தனது நண்பர் சகோ: ஜார்ஜ் பெர்னாண்டஸ்" அவர்களை "தேரந்தெடுத்தார் நமது ஐயா நமச்சிவாயம் அவர்கள்.**

**அதன் விளைவாக SRMU "இந்திராவின் கோபக் கனலுக்கு" ஆளாகி "1976 ல் அங்கீகாரத்தை இழந்ததும்,**

**மத்திய அரசின் (ரயில்வே அமைச்சகம் / ரயில்வே போர்டு) அங்கீகாரமும் இல்லாமல், AIRF ன் ஆதரவையும் இழந்தாலும், அட்டை பாஸ்கள் (DCP's) இல்லாமல், SCL கள் இன்றி, சங்கத்திற்கென அலுவலகங்கள் இல்லாமல், 1976 முதல் மீண்டும் நீண்ட நெடிய சட்டப் போராட்டங்களுக்கு பிறகு 1986ல் அங்கீகாரம் பெறும் வரை உயிரோட்டமாக, தொழிலாளர்களின் சிம்ம குரலாக "திகழ்ந்த" SRMU பேரியக்கத்தின் வீர, தீர வரலாறை" மறைந்த தலைவர். சகோ: ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களின் "நினைவு தினமான "இன்று சுட்டிக்காட்டிய நமது பொதுச்செயலாளரும், AIRF ன் தலைவருமாகிய சகோ: டாக்டர் N.கண்ணையா அவர்கள்.**

**"ரயில்வே தனியார் மயத்தை" முன்னெடுத்துச் செல்லும், தொழிலாளர் விரோத மத்திய அரசுக்கு எதிராக" மறைந்த தலைவர் ஜார்ஜ் அவர்கள் காட்டிய வழியில்" ரயில்வே தொழிலாளர்களை" ஒருங்கிணைத்து AIRF போராடும் என தெரிவித்தார்.**







# நடைமுறைக்கு வந்துவிட்ட HRMSஐ பயன்படுத்துவது எப்படி?

முதலில் உங்களது கைப்பேசியில் கூகுள் ப்ளே ஸ்டோர் அல்லது http://www.hrms.indianrail.gov.in வெப்சைட் சென்று HRMS 'ஆப்'ஐ பதிவிறக்கம் செய்து கொள்ளவும்.

HRMS க்கான IDஐ பெற HRMS திரையை திறந்து Near Help W.Login என்று உங்களது இலக்க PF எண்ணை, பதிவிட்டு "GO"ஐ 'கிளிக்' செய்தால் உங்களது HRMS விபரங்களை காணலாம்.

பாஸ்வோர்டு தவறு இருந்தாலோ அல்லது மறந்து விட்டாலோ HRMS திரையை திறந்து, Forget Passwordஐ தேர்வு செய்து, உங்களது Send QTP என கிளிக் செய்தால், 5 இலக்க OTPஐ பெற்று அதன் பிறகு பாஸ்வேர்டை மாற்றலாம். தொடர்ந்து ஆங்கிலத்தில் உள்ளபடி செயல்படவும்.

## HRMS - ரயில்வே ஊழியர்களுக்கான வழிகாட்டுதல்கள்

### பணியாளர் பயனர் கையேடு

இணையதள முகவரி: https://www.hrms.indianrail.gov.in/HRMS அல்லது Google Play Store இலிருந்து HRMS App-ஐ பதிவிறக்கவும்

### HRMS விண்ணப்பத்தில் வெவ்வேறு தொகுதிகளைப் பயன்படுத்தும் செயல்முறை

பதிவு செய்யப்பட்ட மொபைலில் பெறப்பட்ட OTP உடன் HRMS பயனர் ஐடி & கடவுச்சொல் மூலம் உள்நுழைதல்

e-PASS

PF - கடன்

ESS - ஊழியர் சுய சேவை

USE Employee ESS Module

For more details in HRMS Application: Click on "HELP" & "FAQ" located at top of Right-hand Side.

Divisional Personnel Officer/SA Divn. /S. Rly.





# 2018-2021க்கான காலகட்டத்திற்கு "அகில இந்திய" LTC க்கு இணையாக ரயில்வே தொழிலாளர்களுக்கு வழங்க வேண்டிய சிறப்பு ரொக்க பணம் குறித்து AIRF கடிதம்!

RBE No. 95/2020 Dt. 05-11-2020 உத்தரவின்படி, "மத்திய அரசு ஊழியர்களுக்கு" 2018-2021 நான்காண்டு காலகட்டத்தில் அனுமதிக்கப்பட்டுள்ள, அகில இந்திய LTCயில் ஒன்றை (2020ல் கோவிட் காரணமாக, யாரும் பயன்படுத்த முடியாமல் போனதால் சரண்டர் செய்து அதற்குப் பதிலாக சிறப்பு ரொக்க பணத்தை பெற்றுக் கொள்ள சில நிபந்தனைகளோடு கூடிய திட்டத்தை மத்திய அரசு 04-11-2020 அன்று வெளியிட்டது.

2020ஆம் ஆண்டு கோவிட் பெருந்தொற்று காரணமாக, ரயில்வே தொழிலாளர்கள் தங்களது Privilege Passகளை பயன்படுத்தி எங்கும் பயணிக்க முடியாததால், அவர்களுக்கும் இந்த நிபந்தனை யுடன் கூடிய சிறப்பு ரொக்க பணம் திட்டம் பொருந்தும் கூடிய அளிக்கப்பட்டது.

இதன்படி, நமது ரயில்வே சகோதர சகோதரிகள் 2018-2021ம் 4 ஆண்டு காலகட்டத்தில் ஏதேனும் ஒரு ஆண்டுக்கான தங்களுக்கு உரிய 3 Passகளை சரண்டர் செய்து சான்றிதழ் பெற வேண்டும். (சரண்டர் சர்ட்டிபிகேட்) அதாவது 2020ஆம் ஆண்டு கணக்கில் 3 பாஸ்களை பயன்படுத்தவில்லை எனில், அந்த 3 பாஸ்களை சரண்டர் செய்யலாம்.

அல்லது இந்த ஆண்டு (2021ம்)க்கான 3 பாஸ்களை சரண்டர் செய்யலாம்.





சரண்டர் செய்யும் ஒவ்வொரு பாஸிலும் உள்ள நபர் ஒன்றுக்கு ரூ.6000 வழங்கப்படும். அதாவது, Passல் தொழிலாளி, மனைவி, குழந்தைகள் விதவை தாயார் என மொத்தம் 5 பேர் இருந்தால் ரூ.6000x5 ரூ.30,000 வரை பெறலாம்.

**ஆனால் ரூ. 6000 பெற ரூ. 18,000 அல்லது ரூ.30,000 பெற ரூ. 90,000 செலவு செய்திருக்க வேண்டும்.**

அதாவது, 05-11-2020க்கும் **31-03-2021க்கும் இடைப்பட்ட காலத்தில் ரூ. 18,000 அல்லது ரூ.50,000த்துக்கு 12% GST யுடன் கூடிய** (அதாவது விமான பயணம், மொபைல் போன், மின்சார தையல் மெஷின், நகைகள் வைக்கும் பெட்டி, ஹோட்டலில் தங்கல், டாக்ஸி செலவு) **பொருட்களை வாங்க செலவிட்டிருக்க வேண்டும் என்பதுடன், அதற்கான பணத்தை** டெபிட் கார்டு, கிரெடிட் கார்டு, **UPI என டிஜிட்டல் முறையில் செலுத்தி, அதற்கான ரசீதில் 12% GST செலுத்தியதற்கான தகவல்கள் இருக்க வேண்டும்.**

**மொத்தத்தில் ஒரு வருடத்திற்குரிய 3 பாஸ்களை சரண்டர் செய்து பணம் பெற அதைவிட 3 மடங்கு கூடுதலாக செலவிடப்பட்டிருக்க வேண்டும்.**

மேற்கண்ட நிபந்தனைகளில் ஒன்றான ஓராண்டுக்குரிய பாஸை சரண்டர் செய்வது என்ற நிபந்தனையில், 2020ல் பாஸ் பெற்று பயன்படுத்த முடியாமல் போனதை RBE No. 114/2020 உத்தரவின்படி நாம் பயன்படுத்தாத பாஸை திரும்ப கொடுத்து அதற்கு இணையான பாஸை 2021-ல் பெற வகை செய்யப்பட்டுள்ளது.

**இதுபோன்று திருப்பித் தரப்பட்ட பாஸை கூட சரண்டருக்கு கணக்கில் எடுக்கலாம் என AIRF தனது 27-01-2020 கடிதம் மூலம் கோரியுள்ளது.**







# AIRFன் கடும் எதிர்ப்பையும் மீறி "மெடிக்கல் இன்சூரன்ஸ்" திட்டத்தை அமல்படுத்தி "ரயில்வே மருத்துவ பிரிவை" மூட முயற்சிப்பதா? AIRF பொதுச் செயலாளர் S.G.மிஸ்ரா கண்டனம்!

நூற்றாண்டுகளுக்கும் மேலாக "பணியில் உள்ள ரயில்வே தொழிலாளர்கள், அவரது குடும்பத்தினர், ஓய்வு பெற்றோர் மற்றும் அவரது குடும்பத்தினர் என சுமார் 60 லட்சம் பேருக்கு ரயில்வே மருத்துவமனைகள் மூலம் அளிக்கப்படும் சிறப்பான மருத்துவ சிகிச்சைக்கு முற்றுப்புள்ளி வைத்து அனைவருக்கும் "மருத்துவ காப்பீடு" என இன்ஸ்யூரன்ஸ் கம்பெனிகளின் "தயவில்" தனியார் மருத்துவ மனைகளில் ரயில்வே தொழிலாளர் களை மருத்துவ சிகிச்சைக்காக, அலைய விடும் முயற்சியை ஏற்கனவே AIRF வன்மையாக கண்டித்துள்ளது.

இதுமட்டுமல்லாமல் AIRF தனது 16-9-2020 மற்றும் 19-11-2020 கடிதங்களில் மருத்துவ காப்பீடு திட்டங்கள் ஏமாற்றுவேலை என்பது மட்டுமல்லாமல், இன்று சுமார், டாக்டர்கள் உள்ளிட்ட 70,000 மருத்துவ பணியாளர்களுக்கு கொடுக்கும் சம்பளம் உள்பட மருந்து, சிகிச்சை செலவுகளுக்கு சராசரியாக தலா ரூ. 3,000/- அல்லது குடும்பத்திற்கு சுமார் **ரூ.10390ம் செலவழிக்கும் நிலை மாறி "பிரிமியமாக" குறைந்தபட்சம் ரூ. 28,000/- ஐ அதாவது 3 மடங்கு செலுத்தவேண்டும் என புள்ளி விவரத்துடன் விளக்கிய பிறகும், ரயில்வே போர்டு 30-12-2020 கடிதம் மூலம் அனைத்து ரயில்வேக்களில் இருந்தும் மருத்துவக் காப்பீட்டு திட்டத்தில் அனைவரையும் இணைக்க தேவையான தகவல்களை திரட்டி வருவது. பெரும் வேதனைக் குரியது என திரு. S.G. மிஸ்ராஜி தெரிவித்துள்ளார்.**

**ஏற்கனவே 2004க்குப் பிறகு சேர்ந்த தொழிலாளர்கள் NPS திட்டத்தின் கீழ் கொண்டு வரப்பட்டு, ஓய்வூதியம் மறுக்கப் பட் டுள்ள நிலையில், மருத்துவ சிகிச்சைக்கும், தனியார் பின் ஓடும் நிலையை ஏற்படுத்துவது "பெரும் போராட்டத்திற்கு" வழி வகுக் கும் என AIRF பொதுச் செயலாளர் தனது கடிதத்தில் தெரிவித்துள்ளார்.**

## மறைந்த AIRF தலைவர் மரியாதைக்குரிய ரகோல்தாஸ் குப்தா அவர்களின் சீர்மிகு தொழிற்சங்க வரலாற்றைப் பாரீர்! இன்றைய இளைஞர்களே தலைவர்களின் வரலாறுகளை படிப்பீர்!

- தற்போதைய பங்களாதேஷின் தலைநகரமான டாக்காவுக்கு அருகே சந்ததிராம் என்ற கிராமத்தில் 30-12-1932ல் பிறந்தவர் திரு. ரகோல்தாஸ் குப்தா அவர்கள்.
- 1942ல் 5ம் வகுப்பு படிக்கும் போதே "வெள்ளையனே வெளியேறு" போராட்டத்தில் கலந்து கொண்டு "உயரட்டும்! உயரட்டும்.!" நமது மூவர்ண கொடி தாழட்டும், தாழட்டும் வெள்ளையனின் கொடி என முழக்கமிட்டவர்.
- 17 வயதிலேயே அதாவது 15-05-1950லேயே "பாட்டா ஷூ" கம்பெனி என்ற புகழ்பெற்ற பிரிட்டிஷ் நிறுவனத்தில் வேலைக்கு சேர்ந்தாலும் தனது சோசலிஸ்ட் நண்பர்கள் பலரும் பணிபுரியும் ரயில்வே பணியில் சேர வேண்டும் என்ற தீராத தாகத்தல் 11-01-1954ல் தனது 21வது வயதில் அன்றைய NE (வடகிழக்கு ரயில்வேயில்) அமீனாகான் பவர் என்ற மின்துறை அமைப்பில் குமாஸ்தாவாக பணியில் சேர்ந்தார்.
- 1954ல், அதாவது ரயில்வேயில் சேர்ந்த இரண்டே ஆண்டுகளில் "கிளை செயலாளராக" தேர்வு பெற்று அன்றைய வடகிழக்கு ரயில்வே மஸ்தூர் யூனியன் பொதுச் செயலாளர் திரு. பிரியகுப்தா அவர்களின் அன்புக் கட்டளையை ஏற்று 21-06-1955 அஸ்ஸாம் மாநிலம் பொய்கை கானுக்கு







இடமாற்றல் பெற்றுச் சென்றார்.

- 1955ல் சென்னையில் நடைபெற்ற AIRF மாநாட்டில் NE ரயில்வே சார்பாக கலந்து கொண்டார்.
- 1956ம் ஆண்டு, சட்டமன்ற இடைத்தேர்தலில் அவரது அரசியல் குரு, PSP கட்சியைச் சார்ந்த பேராசிரியர் ஹேம் பருவா அவர்களுக்கு ஆதரவாக தேர்தல் பிரச்சாரம் செய்து ரயில்வே துறையின் துறை நடவடிக்கைக் ஆளானார்.
- 1958ஆம் ஆண்டு, NE ரயில்வேயில் இருந்து பிரிந்த NF ரயில்வேயின் பொங்கைகான் "கிளை செயலாளராக 04-03-1961 அன்று தேர்ந்தெடுக்கப்பட்டு; "தொழிற்சங்க தரப்பில் இருந்து ஆறுபேர் மட்டுமே (இப்போது 22 பேர் கலந்து கொள்கிறோம்) கலந்து கொள்ளும் GM/PNMல் இடம் பெற்ற முதல் கிளை செயலாளர் என்ற பெருமையை பெற்றார்.
- NFRMUவின் 7 அமைப்பு உறுப்பினர்களில் ஒருவரான திரு. ரகோல்தாஸ் குப்தா 1964ல் AIRFன் செயற்குழு உறுப்பினரானார்.
- 11-02-1966ல் ரயில்வே போர்டு PNM கூட்டத்தில் மிகப்பெரும் AIRF தலைவர்களுக்கு மத்தியில் ஒரு "சாதாரண கிளைச்செயலாளராக" திரு.ரகோல்தாஸ் குப்தா கலந்து கொண்டதுடன் 1966 முதல் 2019ம் ஆண்டுவரை 50 ஆண்டுகளாக நடைபெற்ற அனைத்து Rly. Board PNM கூட்டத்தில் கலந்து கொண்டவர் என்ற பெருமையை பெற்றார்.
- அதுமட்டுமல்ல! ஒரு கிளையின் செயலாளராக "இருந்த காலகட்டத்தில்" ரயில்வே போர்டு PNM கூட்டம் அல்ல, "JCM" டிபார்ட்மெண்டல் கவுன்சில் கூட்டங்களிலும், 1966ம் ஆண்டு முதல் பங்கேற்றார்





என்றால் அவரது அறிவுக் கூர்மை, ரயில்வே விதிகளில் தேர்ச்சி பற்றி அறியலாம்.

- 1971ம் ஆண்டு "HOER குறித்த நீதியரசர் மியாபாய் தீர்ப்பாணையத்தில் (Tribunal AIRF) சார்பாக இடம் பெற்றார்.
- 1971ல் ரயில்வே வொர்க்கர்ஸ் கிளாஸிபிகேஷன் டிரிபியூனல் என்ற ஆணையத்தில் லேபர் தரப்பின் ஆலோசகராக இடம் பெற்றார்.
- 26-4-1988ம் ஆண்டு NFRMU வின் பொதுச் செயலாளராக தேர்வு செய்யப்பட்டு 1989ம் ஆண்டு முதல் JCMன் தேசிய கவுன்சில் உறுப்பினரும் ஆனார்.
- 1960, 1968, 1974 வேலை நிறுத்தங்களில் பங்கேற்று மூன்று முறையும் கைது செய்யப்பட்டு சிறைவாசம் அனுபவித்த திரு. ரகோல்தாஸ் குப்தா அவர்கள் 1968ல் தனது "மனைவியோடு" கைது செய்யப்பட்டு தாப்ரி சிறையில் அடைக்கப்பட்டார்.
- 1978ல் ஜெர்மனி, 1987ல் USSR, 1972 & 2007களில் ஜப்பான் என பல நாடுகளின் ரயில்வே கருத்தரங்குகளில் பெரும் சக்தியாக வலம் வந்தார்.
- AIRF சார்பாக 3வது, 4வது, 5வது, 6வது மற்றும் 7வது சம்பள கமிஷனில் திறம்பட பங்கேற்று குறிப்பாக 6வது சம்பளக் கமிஷனில் வடகிழக்கு மாநிலங்களில் பணியாற்றும் ரயில்வே உள்ளிட்ட மத்திய அரசு ஊழியர்களின் Special Duty Allowance குறித்து 75 நிமிடங்கள் தொடர்ச்சியாக வாதிட்டார்.
- 2008ஆம் ஆண்டு AIRFன் நிர்வாக தலைவராகவும் 2019ம் ஆண்டு AIRFன் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு. ரகோல்தாஸ் குப்தாவின் மறைவு "ஒரு ஈடுசெய்ய இயலாத இழப்பே" ஆகும்.









மருத்துவ பகுதி

# நலம் வாழ ... மனிதர்களை ஆட்டிப்படைக்கும் பயம் 'பத்து'

மனிதர்கள் அனைவரும் ஏதாவது ஒருவகை பயத்திற்கு ஆட்பட்டிருப்பார்கள். அதில் சிலவகை பயங்கள் வித்தியாசமானவை.

1. 'ஜெனியோபோபியா' என்பது முகவாய் குறித்த பயம். இந்தப் பயம் உள்ளவர்கள், மற்றவர்களுக்கு முகவாய் சரியாய் அமைந்திருக்கிறதா என்று உற்றுப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். தங்கள் முகவாய் பகுதியையும் அவ்வப்போது கண்ணாடி முன்பு நின்று பார்த்து பரிசோதனை செய்துகொள்வார்கள். அவர்களது கவலை முழுவதும் முகவாயை சுற்றியே இருந்து கொண்டிருக்கும்.

2. தாடி, மீசை போன்று முகத்தில் வளரும் முடி குறித்தும் சிலருக்குப் பயம். 'போகோனோ போபியா' என்ற இந்த பயம் கொண்டவர்கள், முகத்தில் முடி வளருவதை வெறுப்பார்கள். ஒரு முடி வளர்ந்தாலும் உடனே பிடுங்கி எடுத்துவிடுவார்கள்.

3. 'வெர்போபோபியா' என்பது, வார்த்தைகள் பற்றிய பகுத்தறிவற்ற அதீத பயம். இந்தப் பயம் கொண்டவர்கள், எழுதப்பட்ட வார்த்தையைக் கண்டாலே அஞ்சுவார்கள். அது அவர்களது தனிப்பட்ட வாழ்க்கையையும், வளர்ச்சியையும் பாதிக்கும்.

4. மற்றவர்கள் தன்னை பார்க்கிறார்களோ, உற்றுக் கவனிக்கிறார்களோ என்ற தீவிரமான பயம்தான் 'ஸ்கோபோபோபியா'. இந்த பயம் கொண்டவர்கள் பொது இடங்களில் மக்கள் மத்தியில் செல்லவேண்டும் என்றாலே பதற்றமாகிவிடுவார்கள். இந்த பயம் கொண்டவர்கள் தற்போது அதிகரித்துவருகிறார்கள்.

5. தங்கள் தொப்புளை யாராவது தொட்டுவிடுவார்களோ என்ற





வித்தியாசமான பயம்தான் 'ஆம்பாலோபோபியா'. மற்றவர்கள், அவர்களது தொப்புளைத் தொட்டாலும் இவர்களுக்குப் பயம் வந்துவிடும். இவர்கள் தொப்புளில் பம்பரம் விடும் சினிமா காட்சிகளை பார்த்தால் துடித்துவிடுவார்கள்.

6. மரங்கள் குறித்தும் பயம் கொள்வார்கள். அதன் பெயர் 'டெண்ட்ரோபோபியா'. அதேநேரம், காடுகளைப் பற்றிப் பயப்படுவது 'ஹைலோபோபியா', மரப் பொருட்களைப் பற்றிப் பயப்படுவது 'ஸைலோபோபியா'.

7. கண்ணாடியில் தமது பிம்பத்தைக் காண அஞ்சுவது 'காட்டோப்ட்ரோபோபியா' எனப்படுகிறது. கண்ணாடி உடைந்து விடுமோ, அதிலிருந்து ஏதாவது வெளிவருமோ என்று இந்தப் பயம் உள்ளவர்கள் பீதி கொள்வார்கள். இது சிகிச்சை பெற வேண்டிய அளவுக்கான சிக்கலான பயமாகும்.

8. 'சேட்டோபோபியா' உள்ளவர்களுக்கு, தங்களின் முடி என்றாலும், மற்றவர்களின் முடி என்றாலும் பயம்தான். விலங்கு முடியைக் கண்டாலோ அல்லது முடி அடர்ந்த மனிதரைக் கண்டாலோ இவர்கள் தன்நிலை மறந்து பயந்து நடுங்குவார்கள்.

9. 'பாகோபோபியா' என்றால் விழுங்குவதற்கு ஏற்படும் பயம். இந்தப் பயம் உள்ளவர்கள், ஆரோக்கியமான வாழ்க்கைக்குத் தேவையான உணவு, பானங்களைக் கூட விழுங்கத் தயங்குவார்கள். அதனால் பெரும்பாலும் சாப்பிடாமலே இருப்பார்கள்.

10. பயங்களை பற்றியே நினைத்து பயந்து கொண்டிருப்பவர்களும் இருக்கிறார்கள். அதற்கு 'போபோபோபியா' என்று பெயர். இந்த பயம் கொண்டவர்கள் தங்களுக்கு ஏதாவது ஒன்றைப் பற்றி பயம் வந்துவிடுமோ என்று பயப்படுவார்கள்.

மனதில் தன்னம்பிக்கை இருந்தால் எந்த பயமும் உங்களை நெருங்காது. பயம் என்பது மன பலவீனத்தின் வெளிப்பாடு. பயமின்றி இருப்பதே நலமான வாழ்க்கை.

Pubilshed by ; N.KANNIAH, on behalf of Southern Railway Mazdoor Union, Chennai, from its Office at No. 193,B, Railway colony, Gandhi Irwin road, Egmore, Chennai - 600 008. Printed by : V. Meganathan at Royapettah Stationery and Printing & Allied Products Producers Industrial Co.op. Society Ltd., No. 26, Koya Arunagiri First Street, Royapettah, Chennai - 600 014.
Editor - N. KANNIAH



# GEORGE FERNANDES
## A LEADER PAR EXCELLENCE

- June 3, 1930 — Born in Mangaluru, Karnataka
- 1949 — Moved to Bombay; joined socialist trade union movement
- 1967 — Elected to Parliament from the South Bombay constituency
- 1974 — Led the railway strike
- 1975 — Opposed emergency; was arrested in Baroda dynamite case
- 1977 — Appointed as minister for industries in Janata Party govt; showed IBM and Coca-Cola the door
- 1989 — Became railway minister in VP Singh govt; promoted Konkan Railway project
- 1998 — Became defence minister in NDA government; oversaw the Pokhran nuclear tests and Kargil War
- 2001 — Resigned from defence minister's post after Tehelka scandal; later received clean chit
- Jan 29, 2019 — Breathes his last in Delhi after prolonged illness

1974 "போனஸ்" கோரிக்கைக்காக "பொது வேலை நிறுத்தத்தை நடத்திய, AIRFன் ஒப்பற்ற தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்களின் நினைவு நாள் 29-01-2021



Manual Pass வழங்காத "[illegible]பூர் கேரேஜ்" நிர்வாகத்தி[illegible] கண்டித்து SRMU போராட்டத்தின் ஒரு பகுதி

Date of Publication : Fourth Week of Every month, Mazdoor Murasu (Tamil Monthly) Registered Newspaper RNI No. TNTAM/2009/30920, Postal Regn. No. TN / CCN / 511 / 2019-2021 under WPP Licence No. TN/PMG/(CCR) WPP. 173/2019-2021) Posted at Egmore RMS / 1 (Patrika Channel) Chennai - 600 008.



**பொன்மலை குடியரசு தின விழாவில்**
**“பணிமனை CWM திரு. ஷியாமாதார்ராம், பணிமனை SRMU பொறுப்பாளர் S.வீரசேகரன்/DS/TPJ & AGS மற்றும் செயலாளர்கள் திரு.முருகானந்தம் & R.வீரபாகு**











**26-01-2021 குடியரசு தினவிழாவில் தேசப்பிதா மஹாத்மா காந்திஜி அவர்களுக்கு மரியாதை செலுத்தும் CWM திரு. ஷியாமாதார்ராம், அவரது துணைவியார் மற்றும் திரு.S.வீரசேகரன்/AGS**